விஜயமஞ்சரி மலர் 3.

1414

உ

முருகன் றுணை.

# க்ஷத்திரியன்.



அரசு குலத்தைக் குறித்து

எழுதிய

ஓர் பிரபந்தம்.

மகாமேகா ராஜ்ராஜ, டாக்டர்

[illegible]

[illegible] இஃது [illegible]

சென்னை, தண்டையார்பேட்டை

க்ஷத்திரிய மித்திரன் பத்திராதிபரும்,

ஆரிய க்ஷத்திரியகுல விளக்கம், நமது குலத்தொழில் யாது?

என்னும் நூற்களின் ஆசிரியருமாகிய

த. விஜயதுரைசாமி கிராமணி அவர்களால்

இயற்றப்பட்டு,

சென்னை,

க்ஷ[illegible]ரிய மித்திரன் பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

1923.

விலை அணா 2.]

[Copy - Right.



த. விஜயதுரைசாமி கிராமணியார்,
(இந்நூலாசிரியர்)

# முன்னுரை



இவ் விந்தியாவிலுள்ள சாதிகளின் தன்மையை நிதானத்தோடு ஆராய்ச்சி செய்தால் நான்கு சாதிகளே உள்ளதென்று சொல்லலாம். இந் நான்கிலிருந்தே நானூறு புறப்பட்டன. அந்நான்காவது "பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர்" என்பனவாம். இவர்களே சுத்தசாதி எனப்படும். இவர்களுக்குப் பிறப்பட்டவர்களே அநுலோம சாதியார் என்றும், பிரதிலோம சாதியார் என்றும், அந்தராள சாதியார் என்றும், விராத்திய சாதியார் என்றுங் கூறப்படும். பிராமணர் என்பவர் பிரமத்தியானஞ் செய்யப்பட்டவர்கள், வேதாதி நூற்களையும், யாகாதி கர்மங்களையுஞ் செய்து குருஸ்தானத்தை வகிப்பவர்களாதலின், அவர்கள் வேதத்திற்குரிய சாதிப் பெயர்களை பெற்றனர். க்ஷத்திரியரோ அவர்களுக்கு அடுத்தப் படியில் நிற்பவர், க்ஷேத்திரத்தை யாள்பவர். போரைப் புரிந்து, உலகத்தையாண்டு, அதிகாரத்தை வகிப்பவராதலின் அவர்கள் ஊரையடுத்தப் பெயர்களை சாதிப் பெயர்களாகப் பெற்றனர். வைசியர் வர்த்தகத்திற்குரியவர்கள். அவ்வர்த்தகத்தை விளக்கக்கூடிய சாதிப்பெயர்களைப் பெற்றனர். சூத்திரர் இயந்திரத்தைப்போல் உழவு முதலிய தொழில்களைச் செய்வோராதலின், அவ் வுழவுக்குரிய சாதிப்பெயர்களைப் பெற்றனர். இவற்றுள் அரசர்களுக்கு நாட்டையடுத்தப் பெயர்களென விளங்குவதால், நாடான் கிராமணி என்னும் சாதிப் பெயர்களும் நாட்டை யடுத்த சாதிப் பெயர்களாயினமையின், அப்பெயர்களும் அரசரைக் குறிக்குமெனவும், அப்பெயர்களையுடையார் அரச வம்ஸத்தவர் எனவும் இந்நூலால் அறுதியிடப்படுவர். நயம்:



முருகன் துணை.

# க்ஷத்திரியன்.



"முருகா வென வுனை யோதுந் தவத்தினர் மூதுலகில்
அருகாத செல்வ மடைவர் வியாதி யடைந்து நையார்
ஒரு காலுந் துன்ப மெய்தார் பரகதி யுற்றிடுவார்
பொருகால னூடு புகார் சமராபுரி புண்ணியனே"

"க்ஷத்திரியன்" என்பது வடமொழிப்பகுபதம். அரசன் என்னும் பொருள் கொண்டது.

அமரம், இரண்டாங்காண்டம்,
க்ஷத்திரிய வர்க்கம், 463-வது சுலோகம்.

మూర్ధాభిషిక్తో రాజన్యో ।
బాహుజః క్షత్రియో విరాట్ ॥

"மூர்த்தா பிஷிக்தோ ராஜன்யோ
பாகூஜா க்ஷத்ரியோ விராட்" *

என அமரசிம்மர் க்ஷத்திரியன் என்னும் பெயரை அரசர்களுக்குரிய பல பெயர்களில் ஒன்றென விளக்கியுள்ளார். இப்பெயருக்கு "நாடு, பூமி" எனப் பொருள்கொள்ளும்

* "மூர்த்தாபிஷிக்தன்—பட்டம் சூட்டப்பெற்றவன், ராஜன்யன்—இராஜவம்ஸத்திற் பிறந்தவன், பாகூஜன்—புஜபலமுடையவன், க்ஷத்திரியன்—க்ஷேத்திரத்தை யாள்பவன், விராட்—பிரகாசிப்பவன்" எனப்பொருளாம்.

க்ஷேத்திரம் என்பது மூலமொழியாம். "குரு க்ஷேத்திரம்" என்பதற்கு "குருநாடு" எனவும், "க்ஷேத்திரக்கணிதம்" என்பதற்கு "பூமிக்கணிதம்" எனவும் பொருள் தருதலால், "க்ஷத்திரியன்" என்பதற்கு "க்ஷேத்திரத்தை யுடையவன், பூமியை யுடையவன், நாட்டை யுடையவன்" எனப் பொருள்கொள்ளும். நாடுடைமையும், நாடாளுகையும் அரசருக்குரிய அமைப்பு. அதனால் நாடு அல்லது க்ஷேத்திரத்தையுடையவனே க்ஷத்திரியன் * எனப்படுவன்.

க்ஷத்திரியர் பூர்வம் இந்தியாவிற்கு வடவெல்லையாகவுள்ள இமயமலையின் சிகரங்களாகிய இமயம், குமுடு, கைலை, மேரு, ருத்ரு என்பவைகளை எல்லைகளாகவுடைய பிர்மபுரியில் உதித்தனர். அதாவது கைலை மலையில் ஜெகதீசன் எழுந்தருளி பிர்மபுரியில் ஜெகஜீவர்களுக்கு காரணர்களாகிய "பிர்மா, விஷ்ணு, ருத்திரன்" என்பவர்களைச் சிருஷ்டித்தனர். இவர்களுள் பிர்மாவுக்கு "மரீசி, அத்திரி, புலகன், புலத்தியன், வசிட்டன், அங்கிரசு, கிருது, கவுதமன், பிருகு" என்னும் நவப் பிர்மாக்களுதித்தனர். இந் நவப்பிர்மாக்களுள் மரீசிக்குக் காசிபனும், காசிபனுக்கு சூரியனும் பிறந்து "சூரியகுல க்ஷத்திரியர்" என வெளிப்பட்டும்; அத்திரிக்கு சந்திரன் பிறந்து "சந்திரகுல க்ஷத்திரியர்" என வெளிப்பட்டும் இவ்விந்தியாவை அரசாண்டு வந்தனர்.

சூரிய சந்திரகுல வரசர்கள் இமயமலையிலுள்ள பிர்மபுரியிலிருந்து, இந்துநதிக் கரையோரமாக அணியணியாய் வடமேற்குக் கணவாய் வழியாக சம்புத்தீவு எனப் பெயர்

* "க்ஷத்திரியன்" என்பதற்கு "க்ஷதாத்—ஆபத்தினின்று, த்ரியா—நீக்குபவன்." அதாவது "ஆபத்தினின்று நீக்குபவன்" என்றும்; "க்ஷாத்திரம்—வன்மை, அதனையுடையவன் க்ஷத்திரியன்" என்றும் பொருள் விரிப்பர்.

பெறும் இந்தியாவில் பிரவேசித்து இந்துநதியின் மேற்குக் கரையில் வசித்தனர். அதனால் இவர்கள் "இந்துக்கள்" என்னும் பெயரைப் பெற்றனர். பிறகு இவர்கள் சிந்து அல்லது இந்துநதியைக் கடந்து இமயமலைக்கும், விந்தியமலைக்கும் மத்தியிலுள்ள பாகத்தை ஆண்டமையால், அப்பாகம் ஆரிய வர்த்தம் (ஆரியர் + ஆவர்த்தம் = ஆரியர்களால் நிறைந்தது.) எனப்பட்டது.

ஆரியர்களும் அரசு ஆளுஞ்சாதியாரை அரசர் என்றும், வேதத்தைப் பார்ப்போரை பார்ப்பார் என்றும், வர்த்தகம் புரிவோரை வணிகர் என்றும், உழுவோரை உழவர் என்றும், இன்னும் மற்றத் தொழில்களைச் செய்பவர்களை அந்தந்தத் தொழிலுக்குரிய பெயர்களையே தந்து பல சாதியார்களாகவும் வகுத்துக்கொண்டனர்.

இவர்களுள் க்ஷத்திரியன் செய்தொழிலை க்ஷத்திரியன் செய்யலாமே யன்றி, பார்ப்பான் செய்யக்கூடாது. மற்ற சாதியாருஞ் செய்யக்கூடாது.* நாட்டை யுடையவனாகிய ஓர் வேதியன் நான் அரசன் என்று வெளிவருவானா? அவ் வேதியனைப் புகழ விரும்பினோர் இவ்வேதியன் அரசப் பிரபு என்று பிரஸ்தாபித்தல் கூடுமோ? கூடாதென விளக்கவே "அந்தணாளர்க்கு அரசுவரை வின்றே" எனத் தொல்காப்பியர் † வேதியருக்கு அரசு ஆளல் கிடையாது எனத் துலக்கியிருக்கின்றார். அரசுரிமையாலேயே அரசர் எனப்பட்டனர். அச்சொல்லுக்கு அரசப் பரிசம் உள்ளமையாலன்றோ, அது அரசருக்கு மாத்திரமே பயன்பட்டு, அவர்கள் மாத்திரமே அரசர் ஆகி, ஏனையகுலத்து நாடுடையோர் அரசர் ஆகா

---

* பகவத்கீதை, 18-வது அத்தியாயம், 47-வது சுலோகம்; மநுஸ்மிருதி, 10-வது அத்தியாயம், 73-வது சுலோகம்.

† தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், 82-வது சூத்திரம்.

தொழுங்கினர் இதனால் அரசு ஆளுந்தொழில் வரையறுக்கப்பட்டமையால், அரசரே க்ஷத்திரியர் எனப்படுவர்.

க்ஷத்திரியனுக்கு நாட்டையடுத்தப் பெயரும், பிராமணனுக்கு வேதத்தையடுத்தப் பெயரும், வைசியனுக்கு வர்த்தகத்தையடுத்தப் பெயரும், சூத்திரனுக்குப் பயிரையடுத்தப் பெயரும் சாதிப்பெயராக வழங்கி வருகின்றன.

வேதத்தையடுத்த சாதிப்பெயர்கள் பிராமணருக்குரியன.

பிராமணர்:—பிராமணம்=வேதம், அதை யோதுபவர் பிராமணர்.

பார்ப்பார்:—வேதாதிகளைப் பார்த்தலால் பார்ப்பார்.

மறையவர்:—மறை=வேதம், அதையோதுபவர் மறையவர்.

அந்தணர்:—அந்தம்=வேதமுடிவு, அதை யனுசரித்தலால் அந்தணர்.

வேதபாரகர்:—வேதம்=வேதத்தை, பாரகர்=பின்பற்றியவர், வேதபாரகர்.

வேதியர்:—வேதிகை=யாகம், ஓமம், அதை யனுசரிப்பவர் வேதியர்.

செந்தீவளர்ப்பவர்:—செந்தீ=அக்கினி, அதை வளர்ப்பவர் செந்தீவளர்ப்பவர்.

வேள்வியாளர்:—வேள்வி=யாகம், அதை செய்பவர் வேள்வியாளர். இப்பெயர்களெல்லாம் வேதத்தை யடுத்த பார்ப்பாருக்குரிய சாதிப்பெயர்களாம்.

வர்த்தகத்தையடுத்த சாதிப்பெயர்கள் வைசியருக்குரியன.

செட்டி:—செட்டு=வர்த்தகம், அதையுடையவர் செட்டி.

வைசியர்:--வைசியம்=வர்த்தகம், அதையுடையவர் வைசியர்.

---

* "அன்னராயினு மிழிந்தோர்க் கில்லை" என தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியலில் கூறியவாறு இழிந்தோர் அரசர்போலுஞ் செல்வத்தவராகி நாடாண்டாராயினும் அரசர்எனகூறலமையாது.

வணிகர்:—வணிகம்=வர்த்தகம், அதையுடையவர் வணிகர். இப்பெயர்களெல்லாம் வர்த்தகத்தையடுத்த செட்டிகளுக்குரிய சாதிப்பெயர்களாம்.

பயிரையடுத்த சாதிப்பெயர்கள் சூத்திரருக் குரியன.

காராளர்:—கார்=ஏர் நதி, அதையுடையவர் காராளர்.

சூத்திரர்:—சூத்திரம்=யந்திரம், அதைப்போல் வேலை செய்பவர் சூத்திரர்.

வேளாளர்:— வேளாண்மை = பயிர், அதையுடையவர் வேளாளர்.

உழவர்:— உழவு = படைசால், அதையுடையவர் உழவர். இப்பெயர்களெல்லாம் பயிரையடுத்த வேளாளருக்குரிய சாதிப்பெயர்களாம். இவற்றைப்போல்;

நாட்டையடுத்த சாதிப்பெயர்கள் அரசருக்குரியன.

அதிபதி:— அதிதி = பூமி, அதற்குப் பதியாயுடையவன் அதிபதி.

அவனிபன்:—அவனி=பூமி, அதையுடையவன் அவனிபன்.

அரசன்:—அரசு=நாடு, அதையுடையவன் அரசன்.

இராஜன்:—இராஜ்யம்=உலகு, அதையுடையவன் இராஜன்.

கோன்:—கோ=பூமி, அதையுடையவன் கோன்.

தரணிபன்:—தரணி=பூமி, அதையுடையவன் தரணிபன்.

பார்த்திபன்:—பார்த்திபம்=பூமி, அதையுடையவன் பார்த்திபன்.

புரவலன்:—புரம்=நகர், அதையுடையவன் புரவலன்.

பூபதி:—பூ=பூமி, அதையுடையவன் பூபதி, பூபாலன், என்னும் பெயர்களெல்லாம் நாடடியாகப் பிறந்த அரசருக்குரிய சாதிப்பெயர்களாம். இவைகளைப்போல்

க்ஷத்திரியன் என்னும் பெயரும் நாட்டியாகப் பிறந்த சாதிப்பெயராம்.

"The Caniatchi of Malabar is the Bhumia of Rajasthan." Vide, Tod's Annals and Antiquities of Rajasthan, Vol. I, P. 496; and Hallam, Vol. I, P. 524.

"மலையாள அரசர்கள் காணியாட்சி என்னும் சாதிப் பெயரையும், இராஜபுதானத்தரசர்கள் பூமியர் என்னுஞ் சாதிப்பெயரையும் வைத்து வழங்கி வருகின்றார்கள்" என டாட்துரை அவர்கள் இராஜஸ்தான் சரித்திரத்தில் கூறியிருக்கின்றார்.

"The title of the southern Sandran is Nadan or Nadavi, while in the North they are generally called Gramony" Vide, H. A. Stuart's Census of India 1891, Madras report, Vol. XIII, P. 297.

"தென்தேசத்திலுள்ள சான்றான், நாடான் அல்லது நாடாவி என்னும் பட்டப்பெயரையும், வடதேசத்திலுள்ள சான்றான், கிராமணி என்னும் பட்டப்பெயரையும் சாதாரணமாக வைத்து வழங்கி வருகிறார்கள்" என சென்செஸ் அறிக்கையிலுங் கூறியுள்ளது. இதில் வரும் நாடாவி என்பது நாடு=நாட்டிற்கு, அவி=தலைவன் எனப் பொருள் கொள்ளும்.

இவ்விரு பகுதிகளால் மேல்நாட்டு அரசர் அதாவது மலையாள நாட்டு அரசர் "காணியாட்சி=காணியையுடையவர்" என்கின்ற சாதிப்பெயரையும்; வடநாட்டு அரசர் அதாவது இராஜபுதானத்து அரசர் "பூமியர்=(பூமியை யுடையவர்)" என்கின்ற சாதிப்பெயரையும் வைத்து வழங்கிவருவது போல்; கீழ்நாட்டு அரசர் அதாவது சோழ தொண்டநாட்டு

அரசர் "கிராமணி=(கிராமத்தை யுடையவன்)" என்கின்ற சாதிப்பெயரையும், தென்னாடு அரசர் அதாவது பாண்டிய நாட்டு அரசர் "நாடார்=(நாட்டை யுடையவர்)" என்கின்ற சாதிப்பெயரையும் தொன்றுதொட்டு இடையறாது வழங்கி வருகின்றனர் என விளங்குகின்றது. இந்த "நாடார், கிராமணி" என்னும் பெயர்களும் நாடு சம்பந்தப்பட்ட பெயர்களேயாம். அதனால் கிராமணிகளும் நாடார்களும் க்ஷத்திரியர்களே யாவர்.

அமரசிம்மம், மூன்றாவது காண்டம்,
206-வது சுலோகம்.

గ్రామణీ ర్నాపితే పుంసి।
శ్రేష్ఠే గ్రామాధిపే త్రిషు॥

"கிராமணீர் நாபிதே பும்ஸி
ஸ்ரேஷ்டே கிராமாதி பேத்ரிஷு"

இச்சுலோகத்தில் கிராமத்தை யுடையவனுக்கும், சிரேஷ்டனுக்கும் கிராமணி என்னும் பெயர் உரியதெனக் கூறியிருக்கின்றது.

சூடாமணி நிகண்டு, மக்கட்பெயர்த்தொகுதி.

"அடைவுள கிராம முற்றோன்
கிராமணி யாகு மன்றே" *

இச்சூத்திரத்தில் பல கிராமங்களையுடையவனுக்கே கிராமணி என்னும் பெயர் உரியதெனக் கூறியிருக்கின்றது.

* "அடைவுள—அநேக, கிராமம்—கிராமங்களை, உற்றோன்—உடையவன், கிராமணி—அரசன், ஆகும்—ஆவான்" என்பதாம். கிராமணி என்றாலும், கிராமியன் என்றாலும், கிராமமுற்றோன் என்றாலும் பொருள் ஒன்றே.

வான்மீகி ராமாயணம், யுத்தகாண்டம்,
107-வது சர்க்கம்.
ஆதித்ய ஹ்ருதயம், 21-வது சுலோகம்.

అజితః ఖడ్గధృద్విష్ణుః
కృష్ణశ్చైవ బృహద్బలః।
సేనానీర్గ్రామణీశ్శక్తిః
బుద్ధిస్సత్వం క్షమాదమః॥

"அஜித கட்க த்ருத் விஷ்ணு
க்ருஷ்ணச் சேய்வ ப்ருஹத் பல:
சேனு நீர் க்ராமணீஸ் சக்வம்
புத்திச் சத்யஞ் க்ஷமா தமா"

[இ-ள்.) "நந்தகமென்னும் கட்கத்தைக் கைக்கொண்டவனும், விஷ்ணுவும், கிருஷ்ணனும், அஸாதாரணமான சாமர்த்ய முடையவனும், தேவர்களது சேனைகளை நிர்வகிப்பவனும், கிராமணியும், ஸத்வமும், புத்தியும், சத்தியமும், க்ஷமையும், தமமும், தேவரீரே!" என்று பிரமதேவர் ஸ்ரீராமரைத் துதித்தார் என்பதாம்.

இச்சுலோகத்தில் ஸ்ரீராமரை கிராமணி என்றழைத்தனர் வால்மீகிருஷி. ஸ்ரீராமர் அநேக கிராமங்களடங்கிய அயோத்தியை ஆண்டதால் அவரை கிராமணி எனல் ஸர்வ ஸம்மதம். இக்கருத்தை யுட்கொண்டே, இச்சுலோகத்தில் வரும் கிராமணி என்னும் பதத்திற்கு "உலக ரட்சகர்" என்னும் பொருளை தந்து எழுதியிருக்கின்றார் தாததேசிக தாதாசாரிய சுவாமிகள். "உலகம்" என்னும் பதத்திற்கு "பதினான்குலகம், பூமி" என்னும் பொருள்களைப் பயந்து நிற்கின்றது சதுரகராதி. இவர் தெய்வாம்சையால் பதினான்கு உலகத்

திற்கு இரட்சகராயிருப்பினும், தசரதன் வம்ஸத்தை விளக்க வந்து, அயோத்தியை ஆண்டதால் புவிரட்சகருமாவர். இரட்சிக்குந் தொழிலையுடையோர் தெய்வத்திற்கு இரண்டாவது அரசரே! அதனால் கிராமணி என்னும் பெயரைப் பெறுவோர் க்ஷத்திரியரே யாவர். க்ஷத்திரியர் என்னும் பதமும், கிராமணி என்னும் பதத்தின் கருத்திலேயே நிற்கும்.

வியாசபாரதம், நகுலன் மேற்குதிக்கு விஜயபர்வம்,
32-வது அத்தியாயம், 8-வது சுலோகம்.

గణానుత్సవ సంకేతాన్
వ్యజయత్పురుష ర్షభః।
సింధుకూలాశ్రితాయేచ
గ్రామణ్యా మహాబలాః॥

"கணா னுத்ஸவ சங்கேதான்
விஜயத் புருஷர் பவ:
சிந்து குலா ஸ்ரிதா யேச
க்ரா மண்யா மஹா பலா:"

"பாண்டவர்கள் திக்குவிஜயஞ் செய்தகாலத்து, நகுலன் மேற்கு திக்கைநோக்கி சிந்துதேசத்தை யடைந்து, அதை யரசுபுரிந்த பலசாலிகளாகிய கிராமணிகளை சமரிற்செயித்து திரை வாங்கிக்கொண்டு வந்தான்" என்பதாம்.

இச்சுலோகத்தில் "க்ராமண்யா" எனப் பன்மையில் விளித்திருந்தலால், அச்சிந்துதேசத்து அரசர்களது வம்ஸமுற்றிலுங் "கிராமணி" என்னும் பெயரே வழங்கிவந்ததெனவிளங்கும். சிந்துதேசம் குருக்ஷேத்திரத்திற்கு மேற்கும், பம்பாயின் ஓர் பாகமாயுமுள்ளது. அச்சிந்துதேசத் தரசர்களை "கிராமணிகள்" என்றழைத்தனர் வியாசர். பாரதம் சுயம்வர காலத்தில் ஜெயாத்ராதன் என்னும் அரசன் இருந்தான். இச்

ஜெயாத்ராதனும் அவன் குலத்தவர்களும், பாரதப்பகுதியை யொத்து, "கிராமணி" என்னும் பெயரை குலப்பெயரும் பட்டப்பெயருமாய் வகித்து வந்ததைப்போல், அக்குலத்தி லுதித்த அரசர்களுக்கு அதுவே குலப்பட்டப் பெயராய் பூர்வ வழக்கை யனுசரித்து, நாளதுபரியந்தம் தொன்று தொட்டு வழங்கி வருகின்றது.

இதைப்போல் நாட்டையுடைய அரசர்களையும் 'நாடான்' என்று அழைக்கப்படும்.

"In times of remote antiquity this province (Tirunelveli) formed part of the great Pandian Dynasty, the capital of which was Madura; and was divided into principalities and states, denominated Naads, and governed by a noble race of Chettrie Princes." Vide, Thomas Turnbull's Geog. and Statis, Memoir of Tirunelveli, P. I, in 1823.

"ஆதிகாலத்தில் திருநெல்வேலிப் பிரதேசம் பெரிய பாண்டிய இராஜ்யத்தின் ஓர்பாகமாயிருந்தது. அந்த இராஜ்யத்திற்கு பிரதான நகரம் மதுரை எனப்படும். அது நாடுகள் என்று சொல்லப்படும் பல சிறு இராஜ்யங்களாகப் பிரித்து அரச குலத்தவர்களால் (நாடார்களால்) ஆளப்பட்டுவந்தன" என்று தாமஸ் டர்ன்புல்துரை அவர்கள் கிறிஸ்தாண்டு 1823-ம் வருடத்தில் எழுதியுள்ளார். இப்பகுதியில் பாண்டியராஜன் தம் மரபை பல நாடுகளாகப் பிரித்து, அவைகளுக்குத் தன் குலத்தவர்களைச் சிற்றரசராக்கி, தாம் தலைமையாக நின்று அரசாண்டு வந்ததாக விளங்குகின்றது.

"The machinery for the collection of the Government share and general revenue adminis-

tration was very simple. There was first the Viceroy, styled in Chola days Arasu, Raja, or Perumal, while the Nadu was managed by an officer called Nadan, a name derived from that of his charge." Vide, The Chingleput District Manual, Ch. V. P. 204.

*"வரிவாங்கும் முறை வெகு சுலபமாயிருந்தது. சோழ ராஜன் காலத்தில் பிரதிநிதிகளை அரசன், இராஜன், பெருமாள் என்னும் பட்டப்பெயர்களைச் சூட்டி அழைத்தனர். நாட்டையாண்ட பிரதிநிதியை நாடான் என்று அழைத்தனர். நாடான் என்னும் பெயர் அவர்களிடம் ஒப்புவித்த நாட்டிலிருந்து பிறந்தது" எனவும்;*

"Viceroys, often near relations of the reigning house, were entrusted with the administration, sometimes of one and sometimes of several Kottams, with the title of Rajan or Arasan, both signifying king, or Parumal, lord. The Nadu was administered by an officer called a Nadan." Vide, The Chingleput District Manual, Ch. IV, P. 138.

*"பிரதிநிதிகள் ஆளும் அரசனுக்குச் சொந்த பந்துக்கள். இவர்கள் ஒரு கோட்டம் அல்லது பல கோட்டங்களுக்குப் பொறுப்பேற்று, இராஜன், அரசன் என்னும் பட்டத்தைப் பெற்று ஆண்டுவந்தார்கள். நாட்டையாண்ட பிரதிநிதி நாடான் என்று அழைக்கப்பட்டனன்" எனவும் செங்கல்பட்டு மானியூலில் கூறியுள்ளது. :இவ்விரு பகுதிகளால் பிரித்தநாடுகளை ஆண்டுவந்த பாண்டிய அரசரது வம்ஸத்தவர்களை பூர்வம் "நாடார்" என்று அழைக்கப்பட்டு வந்ததென விளங்குகின்றது.*

பதிற்றுப்பத்து, மூன்றும்பத்து,
4-வது அகவல், 9-வது வரி.

"ஞால நின்வழி யொழுகப் பாடல் சான்று
நாடேன் விளங்கு நாடா நல்லிசைத்
திருந்திய வியன்மொழித் திருந்திழை கணவ"

எனப் பதிற்றுப்பத்து நூலார் "அரசர் நாடேன் விளங்குவதால் நாடார் எனப்படுவோர்" என முடித்தனர். அந் நாடாரை சிலப்பதிகாரரும் "நாடேனே வாழ்க" வென்றார். இதனால் நாடு என்பது இடத்தை யுணர்த்தி, அவ்விடப் பெயரடியாக நாடார் என்பது தோன்றி, அரசரை விளக்கினமை காண்க.

பெருந்தேவனார் பாரதவெண்பா,
உத்தியோகப் பருவம், 52-வது செய்யுள்.

"நாடறிய நாடார் சபையகத்தே பாஞ்சாலி
நாடறிய துசுரிந்த நாசத்தால்—நாடறியத்
தன்னேவந் தீர்க்கத் தழைபூங் குழல்விரித்த
பொன்னேயவ் வண்ண மகள்."

(இ-ள்.) "த்ரௌபதையின் சேலையை இராஜ சபையில் (நாடார் சபையில்) அவிழ்த்து மானபங்கஞ் செய்தமையின், அவ்வருத்தந்தீரும் பரியந்தங் கூந்தலை முடியாது தொங்க விட்டாள்" என்பதாம்.

இச்செய்யுளில் சந்திரகுல துரியோதன மகாராஜன் சபையை அதாவது கொலு மண்டபத்தை "நாடார் சபை" என்றழைத்தனர் பெருந்தேவனார். "நாடார்" என்பது இங்கு "நாட்டையாளும் உரிமையுடையார்" என அரசருக்குக் கொள்ளப்பட்டது. நாடார் என்பது இடப்பெயர் பகுபதம். "நாடு" என்னும் பகுதியும், "ஆர்" என்னும் பலர்பால் விகுதியும், உகரக்கேடு சந்தியும் பெற்று, உடன்மேல் உயிரேறி முடிந்தது.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய தேவாரம்,
திருநாட்டியத்தான்குடி, 10-வது பாசுரம்.

"கூடா மன்னரைக் கூட்டத்து வென்ற
கொடிறன் கோட்புலி சென்னி
நாடார் தொல்புகழ் நாட்டியத் தான்குடி
நம்பியை நாளு மறவாச்
சேடார் பூங்குழல் சிங்கடி யப்பன்
திருவா ரூரா னுரைத்த
பாடா ராகிலும் பாடுமின் றொண்டீர்
பாடநும் பாவம் பற்றறுமே."

(இ-ள்.) "பகை யரசரை கூட்டத்தோடு வென்ற வலிய ராகிய கோட்புலி நாயனாரால் வாழப்பெற்றதும், சோழராஜர்களது (சென்னி நாடார்) புகழில் தங்கியதும் ஆகிய திருநாட்டியத்தான் குடியில் எழுந்தருளிய சிவபிரானை தினமும் மறவாதவரும் பெருமைபொருந்திய பூங்கூந்தலையுடைய சிங்கடியம்மையின் தகப்பனுமாகிய ஸ்ரீமத் சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த பாடல்களை யாகிலும் தொண்டர்களே! பாடுங்கள். அப்படிப்பாட உங்கள் பாவங்கள் பற்றற்றுப் போகும்" என்பதாம்.

இப்பாசுரம் ஸ்ரீமத் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாக்கால் திருவாய் மலர்ந்தருளியதாகும். இதில் வரும் 'சென்னி' என்பது சோழனைக் குறிக்கும். அது "சென்னி வளவன் கிள்ளி செம்பியன், சூரியன் புனனாடன் கோச்சோழன் பெயரே" என்னுந் திவாகரச் சூத்திரத்தால் விளங்கும். "சோழராஜனை புனனாடன்" எனவும் அழைத்தனர் திவாகரர். புனல் நாடன் என்பதில் விளங்கும் "நாடன்" என்பது "அன்" விகுதியைப்பெற்ற குறுக்கல் விகாரம். "சென்னி நாடான்" என்பதில் விளங்கும் 'நாடான்' என்பது 'ஆன்'

விகுதியைப்பெற்ற நீட்டல் விகாரம். "அன்னு னிருமொழி யாண்பாற் படர்க்கை"* என்னும் நன்னூல் சூத்திரத்தால் அன்னும் ஆனும் ஆண்பால் விகுதிகள் எனப் பட்டமையின், பொருள் ஒன்றெனவிளங்கி, நாட்டையுடையவனெனும் சோழ ராஜனைத் தெரிவித்தன. அப்படி சோழராஜர்களைத் தெரிவிக்கவே ஸ்ரீமத் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம் திருவாக்கால் "சென்னி நாடார்" என்று பன்மையில் விளக்கினர். இவற்றால் "நாடார்" என்பது "அரசர்" என்னும் பொருளைத்தந்து முடிந்தது. நாடான், கிராமணி என்னும் இருவார்த்தைகளில் நாடான் என்பது தமிழ்ச் சொல்லும், கிராமணி என்பது கிரந்த சொல்லுமாம்.

"The two words Nadan and Gramony mean the same thing, namely, ruler of a Country or of a Village, the former being a Tamil, and the latter a Sanskrit word." Vide, Edgar Thurston's Castes and Tribes of Southern India, Vol. VI, P. 368.

"நாடான், கிராமணி என்னும் இரண்டு வார்த்தைகளுக்கும் அருத்தம் ஒன்றே! அதாவது நாட்டிற்கு அரசன் கிராமத்திற்கு அரசன் எனப் பொருள்கொள்ளும். முன்னது தமிழும், பின்னது சமஸ்கிருத வார்த்தையுமாம்" என தர்ஸ்டன்துரை அவர்கள் "தென்னிந்தியாவின் சாதிகளுங் குலங்களும்" என்னுஞ் சரித்திரத்தில் கூறியிருக்கின்றார். இப்பகுதியால் கிராமணி என்னும் கிரந்த வார்த்தையை சோழ நாட்டரசர்களும், நாடான் என்னும் தமிழ் வார்த்தையை பாண்டிய நாட்டரசர்களும் வைத்து வழங்கி வந்ததாக விளங்குகின்றது. அப்படி வழங்கி வருவதற்குங் காரணமுண்டு.

* நன்னூல், வினையியல், 6-வது சூத்திரம்.

சூடாமணி நிகண்டு.

"பரிதியொன் றுதயஞ் செய்து
பங்கய மநேக கோடி
முருகெழ மலர்வித் தென்ன
முகமுடை னக மலர்த்தி
மருவுமுத் தமிழை முன்னாள்
வளர்த்த பாண்டியனே போலக்
கருதிய வெல்லாந் தந்து
கவிமணி மாலை சூடி" எனவும்;

வில்லிபாரதம்.

"பொருப்பிலே பிறந்து தென்னன்
புகழிலே கிடந்து சங்கத்
திருப்பிலே யிருந்து வைகை
யேட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர்
நினைவிலே நடந்தோ ரேன
மருப்பிலே பயின்ற பாவை
மருங்கிலே வளரு கின்றாள்"

எனவுங் கூறிய செய்யுள்களால் தமிழ்ப் பாஷையை பாண்டியன் வைராக்கியத்தோடு வளர்த்து வந்தமையால் பாண்டியனும், அவன் வம்ஸத்தவர்களும் தமிழ்ப் பெயராகிய 'நாடான்' என்பதைக் குலப்பெயராக வைத்து வழங்கி வந்தனர். நாளதும் வழங்கி வருகின்றனர். சோழனும், அவன் வம்ஸத்தவர்களும் அவ்வைராக்கிய மின்மையால், தங்கள் முன்னோர்கள் வழங்கி வந்த கிரந்தப் பெயரையே நெடுகிலும் வழங்கி வந்தனர். நாளதும் வழங்கி வருகின்றனர். நிற்க, மேற்கூறியவற்றால் "க்ஷத்திரியன், நாடான், கிராமணி" என்னும் பெயர்கள் அவர்களது குலப்பொருளாகிய "நாடு" என்

னும் குலதனத்தை ஆளுதல் நோக்கியே ஏற்பட்டப் பெயர்கள் என விளங்கின. ஆதலால் இந்த "க்ஷத்திரியன், நாடான், கிராமணி" என்னும் மூன்று பெயர்களும் மேலே கூறிவந்த "அதிபதி" முதலாக "பூபதி" ஈறுகக்கூறிய ஒன்பது நாடு சம்பந்தமுடைய பெயர்களோடு சேர்ந்தவைகளே யாம். நாடு சம்பந்தம் அரசருக்குரியது. ஆகவே, நாடார் என்னும் பெயரும், கிராமணி என்னும் பெயரும் க்ஷத்திரியர்களுக்குரிய பெயர்களெனவும், அப்பெயர்களைப் பெற்றிருக்குஞ் சாதியார்கள் அரச வம்ஸத்தவர்கள் எனவும் ஐயமற விளங்கும்.

முற்றிற்று.

மகாமகோபாத்யாய, டாக்டர்

